*Nam nāṭu*

*Malar 2, itaḻ 170*

*December 29, 1954*

Record no. 1131

REGD. No. M. 6311 ★ தனி இதழ் 1 அணு ★ இலங்கையில் 10 சதம் ★ 'PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க.தினஇதழ் ஆசிரியர்: அண்ணாதுரை



The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

மலர் 2] சென்னை: மார்கழி 14உ புதன் (29—12—54) ★ ★ வெளியூர்: மார்கழி 15உ வியாழன் (30—12—54) [இதழ் 170

## நீதிபதிகளின் வேலை நிறுத்தம்!

ஆஸ்திரிய நாட்டின் காரிந்தியா பகுதியைச் சேர்ந்த நீதிபதிகள் தங்களுக்குத் தரப்படும் சம்பளம் போதவில்லை எனவும், வரும் பிப்ரவரி 1-ந் தேதிக்குள் சம்பள உயர்வு தரப்படாவிட்டால் அன்று முதல் வேலை நிறுத்தம் செய்ய முடிவெடுத்திருப்பதாயும் செய்திகள் வெளி வந்துள்ளன.

மேற்கு ஆஸ்திரியாவைச் சேர்ந்த நீதிபதிகளும் வேலை நிறுத்தத்தில் ஈடுபடுவது பற்றி ஆலோசிக்கவிருக்கிறார்களாம்.

நீதிபதிகளின் சம்பள உயர்வு பற்றி வியன்னாவில் கடந்த சில மாதங்களாகப் பேச்சுவார்த்தைகள் நடைபெற்று வந்திருக்கின்றனவென்றும், ஆனால், உடன்பாடு ஒன்றும் ஏற்படவில்லை எனவும் தெரிகிறது.

# கடமை தவறும் நகரசபை உறுப்பினர்கள்!

## அவர்களுக்கு எதிராகக் கருப்புக் கொடி ஆர்ப்பாட்டம்

### குற்றச்சாட்டுகள் நிரம்பிய கோரிக்கை மனு

*பூனா மேயரிடம் பொதுமக்கள் கொடுத்தனர்*

"கூட்டத்தை நடத்துவதற்குத் தேவைப்படும் எண்ணிக்கை அளவு உறுப்பினர்கள் கூடாத காரணத்திற்காக, அடிக்கடி கூட்டங்களை நடத்த முடியாமல் தள்ளி வைப்பது; துணைக் குழுக் கூட்டங்களுக்கு, அதன் உறுப்பினர்கள் ஒழுங்காகச் செல்லாமல் இடையிடையே தவறி விடுவது; துணைக் குழு சிபாரிசுகள் நிறைவேற்றப்படாமல் ஏட்டளவிலேயே விட்டுவிடுவது; கணக்குத் தணிக்கை அறிக்கைகளைக்கூட முடிவு செய்யாமல் இருப்பது."

—இப்படி, பூனா நகராட்சி மன்றத்தின் போக்கு இருப்பதாக, நகரப் பிரமுகர்கள் தூதுக் குழு அறிக்கை கூறுகிறது.

நகர முக்கியஸ்தர்கள் பலர்கூடி, விஷய விளக்க அட்டைகளுடனும், கருப்புக் கொடிகளுடனும் பூனா நகர முக்கிய தெருக்களின் வழியாக ஊர்வலம் சென்று, நகராட்சி மன்றத்தை அடைந்தனர். அவர்களை நகர மேயர் வரவேற்றுக் குறைகளைக் கேட்டார்.

தூதுக் குழுவின் முக்கியஸ்தர்களான எழுவர் நகர சபை உறுப்பினர்களின் கடமை தவறும் நடத்தைகளைச் சுட்டிக்காட்டி, விளக்கமான அறிக்கை ஒன்றையும் மேயரிடம் கொடுத்தனர். அதைப் பெற்றுக்கொண்டு, அவரும், ஆவன செய்வதாக வாக்களித்தார்

'உறுப்பினர்களின் போக்கு பூனா நகருக்கே களங்கமுண்டாக்கி விட்டது' எனத் திட்டவட்டமாக குறிப்பிடப்பட்டுள்ளது.

## 16-காங்கிரசார் ராஜினமா

சித்தூர் மாவட்ட காங்கிரஸ் கமிட்டிச் செயலாளரான திரு. டி. சீனிவாச அய்யங்காரை ஆந்திர சட்ட சபைத் தேர்தலில் சித்தூர் தொகுதிக்கு காங்கிரஸ் அபேட்சகராகத் தேர்ந்தெடுக்காததை ஆட்சேபித்து, சித்தூர் வட்டார நகர காங்கிரஸ் குழுக்களின் செயலாளர்கள், தலைவர் உட்பட 16 பேர் பொறுப்பிலிருந்து விலகிக்கொண்டனர் என்று தெரிகிறது.

தாங்கள் சிபாரிசு செய்த அபேட்சகரைத் தேர்ந்தெடுக்காவிடில் தேர்தலில் கலந்துகொள்வதில்லை என நகர, வட்டார காங்கிரஸ் கமிட்டிகளின் கூட்டுக் கூட்டம் டிச. 25-ந் தேதியன்று உறுதி செய்துள்ளதாம்.

## சீனக் கலைஞர்களுக்கு கவர்னர் வரவேற்பு

சென்னை, டிச. 29—

சென்னை கவர்னரின் மாளிகையில் நேற்றுமாலை சீனக் கலாச்சாரத் தூதுக் குழுவினருக்கு கவர்னர் திரு. பிரகாசா அவர்களால் ஒரு வரவேற்பு நடத்தப்பட்டது.

தேநீர் விருந்திற்குப் பிறகு பாஸ்கர்ராய் சௌத்ரி, குமாரி சாந்தா ராவ் ஆகியோரின் நடனம் நடைபெற்றது.

முதன் மந்திரி காமராசர் உள்ளிட்ட பல அதிகாரிகளும் பிரமுகர்களும் வரவேற்பில் கலந்துகொண்டனர் எனத் தெரிகிறது.

## தனிப்பட்டவர்களுக்கு சுதந்திரம்

### இல்லை என்று கூறிய கம்யூனிஸ்டு கைது

யூகோஸ்லேவிய சர்க்கார், விலாடிமிர் டெடினர் என்றும், கம்யூனிஸ்டுத் தலைவரை, 'தனிப்பட்டவர்களுக்குச் சுதந்திரம் இல்லை,' என்று அவர் கூறியதற்காகக் கைது செய்திருக்கின்றனராம்.

அவர் பத்திரிகை நிருபர்களுக்கு அளிக்கப் போவதாகத் தெரிவித்திருந்த பேட்டி சட்டவிரோதமானதென்றும், அயல் நாட்டு நிருபர்கள் அவருடைய பேட்டிக்குச் செல்லக்கூடாதென்றும் அதிகாரிகள் அறிவித்தனராம்.

அந்த கம்யூனிஸ்டுத் தலைவர் மக்கள் சபை உறுப்பினர்; மத்திய கம்யூனிஸ்டுக் கமிட்டியிலும் உறுப்பினராயிருக்கிறார்.

## 'நாட்டின் நலமென்பது சுதந்திரமும் உரிமையுமே'

### 'உலக முழுமைக்கும் ஒரே ஆட்சி ஏன் கூடாது?'

*பீகார் கவர்னரின் 'வெண்டல் வில்கி' பேச்சு*

மீர்ஜாபர்பூர், டிச. 28—

"உண்மையான நலமிகு நாடு, ஒரு ஜனநாயக அமைப்பில் இருக்க முடியுமா என்ற கேள்வி, காலங்கடந்ததாயினும் இன்று முன்னணிக்கு வந்திருக்கிறது.

"ஜனநாயக சுதந்திரமும், விவாதங்களின் மூலம் முடிவுகளை மேற்கொள்ளும் உரிமையும்தான் ஒரு நாட்டு மக்களுடைய நல்வாழ்வின் சாரமாகும் என்று கூறுவதற்கு நான் தயங்கமாட்டேன்.

"இவை ஒரு நாட்டில் இல்லாவிட்டால் அந்த நாட்டில் நலம் மிகுந்திருக்கிறதென்பதே அறிவீனமாகும்"

—என்று பீகார் மாநில கவர்னரான ஆர். ஆர். திவாகர் இந்திய அரசியல் விஞ்ஞான 17-வது மாநாட்டைத் துவக்கிவைத்துப் பேசுகையில் குறிப்பிட்டார்.

"உலக முழுவதற்கும் ஒரே ஆட்சி என்ற நிலை பிறந்தால்தான், உலக மக்கள் அத்தனை பேருக்கும் பாதுகாப்பு, சமாதானம், மகிழ்வு இவற்றுடன் கூடிய வாழ்வு கிடைக்கும்."

"பலமொழிகள், பல நாடுகள் கொண்ட அரசாங்கங்கள் அமையமுடியும்போது, ஏன் உலகம் முழுவதும் ஒரு கூட்டாட்சியின் கீழ் வாழக் கூடாது என்று கூறுவதற்கு காரணம் எதுவுமிருப்பதாக எனக்குத் தெரியவில்லை," என்றும் அவர் கூறினர்.

*நாடக சட்டத்தை ஆதரித்தவர் கண்களிலும்!*

## 'இராமாயண நாடகத்திற்கு ஆச்சாரியார் வானொலிப் பேச்சே அடிப்படை'

## 'வானொலியில் இராமாயணம் பற்றிப்பேச அவரை அனுமதித்தது முறையா?'

### 'அதை மறுத்துப் பேசக்கோரினதை அரசாங்கம் மறுத்தது நியாயமா?'

"புண்படுத்தக் கூடிய நிலையிலே நாடகம் நடைபெற்றதாலும், பலர் அதை ஆட்சேபித்ததாலும் இந்த மசோதாவைக் கொண்டுவர வேண்டிய நிலைமை ஏற்பட்டதென்று அமைச்சர் சொன்னார். நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக இப்படிப்பட்ட நாடகங்கள், காலட்சேபங்கள் நடந்து வந்திருந்தும் யாரும் ஆட்சேபணை சொல்லாமல் இருக்கும்போது, இப்பொழுது மாத்திரம் இச்சட்டம் வருவதற்குக் காரணம் என்ன?

"'இராமாயணம்' என்று சொல்லப்படுகிற நாடகத்தை—கம்பன் காவியத்திலிருந்த பாத்திரத்தை—'கடவுள் அவதாரம்' என்று பரப்பச் செய்வதன் மூலம் சந்தேகமும் குழப்பமும் ஏற்படுகிறது;

"வால்மீகி இராமாயணத்தில் உள்ளபடி எந்தவிதமான மாறுதலும் இல்லாமல் நடத்தினால், சர்க்காருக்கு, அதைத் தடை செய்வதற்கு அதிகாரம் இம்மசோதாவில் இருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன். ஒரு ஆதாரத்தை வைத்து—ஒரு வரலாற்றை அடிப்படையில் வைத்து, ஒருவர், ஏதாவது ஒரு நாடகத்தை நடத்தினால், அதற்கு எந்த ஆட்சேபணை இருக்க முடியும் என்று கேட்கிறேன். ஆதாரத்தை வைத்து நடத்தப்படும் நாடகம், 'புண்படுத்துகிறது' என்று சொன்னால் அதன் மூலத்தை—ஆதாரத்தைத்தான் மாற்ற வேண்டும்;

"இராமாயணத்தைப் பற்றி மக்களிடையே சர்ச்சை நடந்து கொண்டிருக்கும்போது, திடீரென திரு. இராசகோபாலாச்சாரியார் அவர்கள், 'மதச் சார்பற்ற' சர்க்காரைச் சேர்ந்த வானொலி நிலையத்தில், 'இராமாயண'த்தைப் பற்றி பேச முன்வந்தார்; அதில் நம்பிக்கை இல்லாதவர்கள், தாங்களும் அந்த மாதிரி வானொலியின் மூலம் பேசவேண்டும் என்று கேட்டதற்கு, இடம் தர மறுக்கப்பட்டது; விளைவு என்ன? உடனே, தெருத் தெருவாக 'இராமாயண'ப் பிரசங்கங்கள், நாடகங்கள் நடைபெற ஆரம்பித்து விட்டன."

—இவ்வாறு, இத்திங்கள் 23-ந் தேதியன்று நடைபெற்ற சென்னை சட்ட (மேல்) சபைக் கூட்டத்தில், சென்னை சர்க்காரின் புதிய நாடக தடைச் சட்டம் பற்றிப் பேசுகையில் திரு. வி. வி. இராமசாமி குறிப்பிட்டார்.

மேலும், தொடர்ந்து அவர் பேசியதாவது:—

"பழங்காலந்தொட்டு 'ஒரே தெய்வம், ஒரே குலம்' என்ற பண்பாட்டில் வந்த தமிழ் நாட்டிலே, பழைய கொள்கை மாறி, இப்பொழுது ஆயிரக்கணக்கான கடவுள்களும், சில வணக்கங்களும் பரவி மக்களை மூட நம்பிக்கையில் ஆழ்த்தியிருக்கிறதென்பதைமறுக்க முடியாது.

மேல்நாடுகளிலுள்ள காவியங்களில் சித்தரிக்கப்பட்டிருக்கும் பாத்திரங்களை, கடவுள் அவதாரமாக மாற்றுவதற்கு முயற்சி செய்யவோ, அவர்களைப் பாராட்டி வணங்கவோ, அவர்களுக்கு முக்கியத்துவம் கொடுப்பதோ இல்லை. ஆனால், நம் நாட்டிலோ, மக்களால் இயற்றப்பட்ட காவியங்களிலுள்ள பாத்திரங்கள், 'கடவுள் அவதாரம்' என்று சொல்லி, மக்களிடத்தில் பரப்பப்பட்டு வந்திருக்கின்றது. எத்தனையோ நாடகங்களும், பஜனைகளும், பிரசங்கங்களும் எத்தனையோ இடங்களில் செய்துவந்தாலும்கூட, மக்கள் ஆட்சேபணை செய்யாமல் நடந்துகொண்டே வந்திருக்கின்றனர்.

தங்களிடத்தில் சரியான தடைச் சட்டம் இல்லாதபடியால், தடுப்பதற்கோ, நடவடிக்கை எடுப்பதற்கோ ஒரு மசோதா கொண்டுவருவதாக கவர்னர் உரையிலே சொல்லப்பட்டது; அந்த உரையிலே சொல்லப்பட்ட இந்த மசோதா, உடனடியாகப் பரிசீலனைக்குவரும் என்று சொன்ன மறுநாளே மதுரையில் கலவரம் நடைபெற்றிருக்கிறது.

'புண்படுத்தக்கூடிய' நாடகங்களைத் தடுக்கக்கூடிய மசோதா கொண்டுவருவதற்கு முன்வந்திருக்கும்போதே, கொஞ்சமும் தாமதித்துப் பார்க்காமல்—ஆலோசனை செய்து பார்க்காமல்—சட்டப்படி தடை செய்கிறார்களா என்றுகூட பொறுத்துப் பார்க்காமல்—பலாத்காரம் ஏற்பட்டது யாரால் என்று சர்க்கார் ஆலோசனை செய்ய வேண்டும்.

இவ்வளவு காலமாக சரியான பாதையில் செல்லாத நாடு, இப்பொழுது ஒரு மாதிரியாக சீர்திருத்த முறையில் போய்க் கொண்டிருக்கிறது. திடீரென்று இவ்வித மசோதாவைக் கொண்டுவந்து, 'அவ்விதமான சீர்திருத்தக் கருத்துக்கள் கடவுள் நம்பிக்கை உள்ளவர்களையும், மத நம்பிக்கை உள்ளவர்களையும் புண்படுத்துகிறது,' என்று சொல்லி, தடை செய்யக் கூடாது; நாடகங்களிலும், பிரசங்கங்களிலும் சீர்திருத்தக் கருத்துக்கள் பரவிக் கொண்டிருக்கையில் இம்மசோதா கொண்டுவரப்படுவது, அவற்றிற்கு ஓர் 'தடைக்கல்' ஆகும் என்ற அச்சம் ஏற்படுகிறது.

'சுயமரியாதைத் திருமணம் செல்லாது' என்று உயர்நீதி மன்றம் தீர்ப்பு சொல்லியபோது, சர்க்கார், அந்தச் சமயத்தில், 'அந்தத் திருமணங்களெல்லாம் செல்லும்' என்று சொல்வதற்கு மாறாக, 'சீர்திருத்தத் திருமணம் செய்து கொண்டவர்கள் பதிவு செய்து கொள்ள வேண்டு'மென்று தீர்மானம் கொண்டுவந்தது.

ஆனால் சினிமாக் காட்சிகள், புரோகிதர்களை வைத்துத்

(4-ம் பக்கம் பார்க்க)

நம் நாடு
தி.மு.க.தினஇதழ் ஆசிரியர்: அண்ணாதுரை
சென்னை 29—12—1954 புதன்

# 'மார்கழித் திருநாளா?'

'மாடு தின்னும் புலேயா உனக்கு மார்கழித் திருநாளா?'' —இப்படிக் கேட்டான், அக் காலத்து வருண முறைக் காப் பாளரான வேதிய குல திலகன், பொன்னம்பலத்தைக் காணவிழைந்த நந்தன் எனும் பழங்குடி மகனை நோக்கி என்று, கோபாலகிருஷ்ண பாரதியார் இயற்றிய நந்தனர் கீர்த்தனை கூறுகிறது! இப் பொழுது, இவ்வாறு கேட் டால், சட்டம் சீறி எழுவதற்கு முன், கேட்கும் ஜாதிவெறி யனின் பற்கள் முப்பத்திரண் டும் முல்லை அரும்புகள் போன்று தரையில் சிதறிவிழும் அளவில், துடிதுடிப்பாகவும் சுறுசுறுப்பாகவும் பழங்குடி மகனின் வலது கரம் பணி புரிந்துவரும். அதன் பிறகு தான் மன்றமேறி வழக்குரை கதை ஒத்திகை இடம்பெறும். இந்த அளவில் இரு சாரா ரிடையும் காலமும்—கருத்தும் புரட்சிகரமாக மாற்றம் பெற் றுள்ளன.

ஆனால் இந்தியத் துணைக் கண்டத்தின் அரசியல் துறையோ, இன்றும், நந்தன் காலத்தில்தான் இருந்துவருகி றது; அதற்குப் பின்னணியில் இருக்கிறது என்று குறிப்பிடு வதுகூட மிகையாகாது.

அக்காலத்தில் 'பக்தியின் பெயரால் சமத்துவம்' கோரின நந்தனை, எவ்வாறு அக்கால வருணமுறை கற்ற வேதியன் அதே உணர்வுடன்தான் இந்தியப் பேரரசின் சார்பில் பேசும் உரிமை வாய்க்கப்பெற்றுக் கும் அமைச்சர்களும், நமது திராவிடத்தின் நீண்ட நாளைய விருப்பத்தை மிரட்டி விரட்டு கின்றனர். வேதியன் கூற்றுக்கு அஞ்சிய நந்தன் கோரிக்கை நாசமடைந்துவிட வில்லை. அதற்கு மாறாக, நந்தன் விரும்பம் இறுதியில் வெற்றிவாகையே சூடியது. அதேபோன்றுதான், இந்தியப் பேரரசின் அச்சுறுத்தலுக்கு அஞ்சி, திராவிடம் தனது கோரிக்கையை கைநழுவ விட்டுவிடாது. கோரிக்கையை விட்டுவிடாதென்பதோடு மட்டு மின்றி, முடிவில் உலகம் வியக் கும் வகையில் வெற்றிமாலை சூடியே தீரும் என்பதும் நிச்ச யத்திலும் நிச்சயமாகும்.

அக்கால வேதியனின் கொடு மையிலிருந்து மீட்சி பெற்று, சிவத்தைப் பெற நந் தனுக்கு சிவனாரின் 'கருணை கடாட்சம்' தேவைப்பட்டது என புராணம் பறைசாற்றுகிறது. ஆனால், திராவிடமோ தனது விருப்பத்தை [illegible] இந்தியப் பேரரசின் பிடிவாதத் திலிருந்து நாம் விடுபடவும் ஆண்டவனின் 'அருள்' தேவை யில்லை; அதற்கு பதிலாக மக்களாட்சி முறையில் ஆண் [illegible] சமமாக உள்ள திராவிட மக்கள் பெருமன் [illegible] ஒத்துழைப்பே போதுமானதாகும். திறக சேலம் மாவட்டத்தில் பூமிக் கடியில் உயர்ந்த ரக இரும்பு

இருக்கிறது என்பதும், அதைத் தோண்டி எடுத்து மக்களுக் குப் பயன்படும் உருக்கு இரும்புப் பொருட்களாக அதை மாற்ற, அங்கு ஒரு உருக்குத் தொழிற்சாலையை நிறுவ வேண்டுமென்பது திரா விடத்தின் நீண்ட நாளைய விருப்பமாகும்.

அக்கோரிக்கை கிளம்பி ஏறத்தாழ 125 ஆண்டுகள் ஆகின்றன. மூச்சுவிடும் கட் டத்தில் துவங்கிய அக் கோரிக்கை, அரசியல் கட்சி வேற்றுமை கருதாது, ஒரே குரல் கொண்டு திராவிடரில் பலர் உரத்துக் கேட்கும் நிலைக்கு இன்று வளர்ந்து இருக் கிறது.

அன்று இருந்த ஆங்கில துரைத்தனம், தங்கள் நாட்டு உருக்குத் தொழிலுக்குப் போட்டியாகச் சேலம் இரும்பு கிளம்பிவிடக் கூடும் என்ற அச்சத்தை மனத்துள் மறைத்துக் கொண்டு, வெட்டி எடுக்கப் படும் இரும்பை பயன்படுத்தி உருக்காக்க தேவையான நிலக் கரி இல்லை, உருவாக்கப்படும் உருக்கிரும்பை பிற நாடு களுக்கு ஏற்றிச் செல்ல பரங் கிப்பேட்டைத் துறைமுகத்திற் குக் கொண்டு செல்வதில் வழிச் செலவு கூடுதலாகிறது என இரண்டு காரணங்களைக் காட்டி, சேலத்து இரும்பை மண்ணுக்குள்ளேயே மறைத்து வைத்துவிட்டனர். ஒன்றே கால் நூற்றாண்டுக்குப் பிறகு ஆங்கிலேயன் அகன்று, அவ னிடத்தில் இந்தியப் பேரரசு குடியேறி இருக்கும் இக்காலத் திலும், சேலத்து இரும்பைத் தோண்டியெடுத்து உருக்கு இரும்பாக்கத் தொழிற்சாலை ஒன்று தேவை எனும் கோரிக் கைக்கு, ஆங்கிலேயன் ஆட்சி யில் கிடைத்த அதே பதில், இந்தியப் பேரரசின் வாயி லிருந்தும் வருகிறது என்றால், வியப்பாகவும், வேதனையாகவும் தானே இருக்க முடியும்?

அவை மட்டுமா?

இந்நாட்டுத் தொழில் முன் னேற்றத்தில், ஆங்கில ஆட்சி யாளர்கள் [illegible] காட்டிய அக்கறையை இன்றைய ஆட்சியாளர்களும் [illegible] காட்டுகின்றனர் [illegible]

"சேலத்திலா இரும்புத் தொழிற்சாலை? அது வெறும் மனக்கோட்டை!'' எனக் கேட்கிறார், இந்தியப் பேரரசில் தொழில்—வர்த்தக அமைச்சராக உள்ள டி. டி. கிருஷ்ணமாச்சாரியார்! இக்கேள்வியில், 'கிண்டல்' இமயம்போல் உச்சம் பெற்று விட்டிருக்கிறது!

ஆயிரம் செந்தேள் ஒரே நேரத்தில் கொட்டினால் ஒரு வருக்கு எவ்வளவு வேதனை இருக்குமோ, அந்த அளவு வேதனையை, அமைச்சரின் கேள்வி திராவிடர்களுக்கு உண்டாக்கி இருக்கும்—இருக் கிறது—என்பதில் துளியும் ஐய மில்லை.

இட்ட அமைச்சரான நந் தாவோ, பதவி ஏற்க இருக்கிற வல்லப பந்தவோ இவ்வாறு கூறி இருந்தால், அது அவர் களின் 'அதிகார வெறியின் விளைவு; பேரரசின் பெருங் குறை' எனத் திராவிடர் தீர் மானித்துக் கொள்ளலாம்.

ஆனால், "சேலத்திலா இருப் புத் தொழிற்சாலை? அது வெறும் மனக்கோட்டை!'' எனத் திராவிடரை நோக்கிக் கேலி மொழி உமிழ்ந்தவரோ, திராவிட நாட்டார் எனச் சொல்லிக்கொள்ளும் அமைச் சர் டி. டி. கிருஷ்ணமாச்சாரி. திராவிடரின் விருப்பத்தை, ஒரு திராவிட நாட்டவரைக் கொண்டே கேலி பேசி கரு வறுக்கச் செய்கிறது இந் தியப் பேரரசு!

ஆங்கில ஆட்சியின்போதும், அமைச்சர் ஆச்சாரியார் போன்ற அருங்குணாளர்க ளைக் கண்டிருக்கிறோம். எற் கனவே இந்தியப் பேரரசில் [illegible] நீண்ட நாள் [illegible] அனைத்தையும் விலக்கு விற்று வாழ்ந்தவர்களையும் பார்த்திருக் கிறோம். அதே கொடிவழி யைப் பின்பற்றி டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் அவர் [illegible] இந்தியப் பேரரசிற்குக் கட் டியங்கூறுவதாக எதிர்பார்க் கக்கூடியதுதான்!

சேலத்தில் உருக்கு இரும்புத் தொழிற்சாலை ஒன்று வேண்டு மென எதிர்பார்ப்பதை கிண் டல் செய்வதற்கு எப்படித் தான் ஆச்சரியமோ மனந் துணிந்தாரோ, நாம் அறியோம்.

அங்கு நிலக்கரி இல்லையாம்! அதனால்தான் அந்தக்கேலியாம்! சேலத்தை அடுத்துள்ளது [illegible] அம் மாவட்டத்திலுள்ள நெய் வேலி நிலக்கரிச் சுரங்கம் [illegible] அமைச்சரும் [illegible] இந்த உண் மையை [illegible] நிலக்கரி காலத்தை சென்னை [illegible] ஆலோசனை நடத்த இந்த அமைச்சர் சென்னை வந்தது; அப்படி இருக்கும்பொழுது, அவருக்கு மேற்படி உண்மை தெரியாது இருக்க முடியும் என எவ்வாறு கூறமுடியும்?

தெரிந்துதான், "சேலத்திலா இருப்புத் தொழிற்சாலை? வெறும் மனக்கோட்டை!'' என, அவ்வமைச்சரை வரை [illegible] எனவும், திராவிடர் கொள்ள அருகதை அற்றவர் கள் எனவும், கொண்ட குண நலமற்றவர் கேலி பேசுவது போல், தொழில், வர்த்தக அமைச்சர் டி. டி. கிருஷ்ண மாச்சாரியாரும் திராவிடர் விருப்பத்தைக் கிண்டல் செய் யதாகிறார்! அரசியல்—பொரு [illegible] திருக்கிறார்!

அக்காலத்தில், நந்தனைக் கேட்டான்வேதியன்-'உனக்கு மார்கழித் திருநாளா?' என. அதே வேதியன் உணர்வுடன் உலாவும் இந்தியப் பேரரசு, இக் கால திராவிடர்களை நந்தனைப் பாவித்துக்கொண்டு, 'மார்கழித் திருநாளா?' என்பதற்குப் பதி லாகக் காலத்திற்கேற்ப, 'சேலத்திலா இரும்புத் தொழிற் சாலை? அது மனக்கோட்டை!'' என ஏளன மொழி வீசு கிறது!

சேலத்தில் இரும்புத்தொழிற் சாலை ஒன்றை உருவாக்க இந்தியப் பேரரசு நிர்மாணிக்க ஒப்பாததற்கு, அமைச்சர் கூறு வதுபோல் நிலக்கரி கிடைக்கா தது காரணமல்ல; மத்திய பிர தேசத்திற்கு உருக்குத் தொழிற் சாலையை நிர்மாணிப்பதாக இந்தியப் பேரரசு ஏற்கனவே கொடுத்துள்ள வாக்குறுதி தான் முக்கிய காரணம் என் பதை, நாளை விளக்கமாக எழு துவோம். உண்மை அப்பொ ழுதுதான் வெட்ட வெளிச்ச மாகும்.

# அந்தமான் குடிகளுக்கு அபின் போதைப் பயிற்சி!

## குங்கலியம், சங்கு இரண்டையும் கொள்ளையிட இப்பாதகமாம்!

கல்கத்தா, டிச. 27—

அந்தமான் தீவுகளில் வசிக்கும் 'பாவமறியாத' ஓங்கோ எனும் பூர்வீகக் குடிமக்களுக்கு அபின் தின்னும் பழக்கத்தை வெளிநாடுகளைச் சேர்ந்த திருட்டு வியாபாரக் கூட்டத்தினர் ஏற்படுத்தி வருகின்றனராம்.

'ஓங்கோ' மக்களுக்கு, கள்ளோ, அபினே இருப்பதாகவே தெரியாது. அவர்களிடம் இந்த போதைப் பொருள்களைத் தந்து அவர்களை மயக்கி, அங்கு ஏராளமாகக் கிடைக்கும் விலை மதிப்பு மிக்க குங்கலியம், சங்குகள் போன்றவற்றைக் கொள்ளையிட்டுச் செல்லவே அந்த வியாபாரிகள் இம்மாதிரி செய்கின்றனராம்.

இந்தத் தகவலை இந்திய அர சாங்க மனித வர்க்க சாஸ்திர ஆராய்ச்சி இலாக்காவின் நிர்வாக அதிகாரியான டாக்டர் என்டட்டா மஜூம்தார் வெளியிட்டுள்ளார்.

கூட்டமொன்றில் பேசிய அவர் மேலும் குறிப்பிட்டதாவது:- "இந்த வெளிநாட்டு வியாபாரி கள் திருட்டுத்தனமாக அந்தமா னில் நுழைந்து இந்தக் கொள் ளையை நடத்துகின்றனர். இதனை முளையிலேயே கிள்ளி எறியா விடின், உறுதியுடனும், ஆரோக்கி யத்துடனும், மகிழ்ச்சியாகவும் வாழ்ந்துகொண்டிருக்கும் ஒரு பழங் குடி மக்களின் வாழ்வு அழிந்து போகும்.

இப்பூர்வீகக் குடிகள் 'பாவ்ணு,' மற்றும் ஓஷியானியா ஆகிய இடங் களில் வாழும் கறுப்பு நிற 'மலா னேசி'யர்களுடன் இனத் தொடர் புடையவர்களாய் இருக்குமென அண்மையில் மேற்கொள்ளப்பட்ட இரத்தப் பரிசோதனை மூலம் தெரிய வருகிறது.

இவர்கள் அந்தமானுக்கு பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்வந்த வர்களாயிருக்கலாம்.

ஓங்கோ மக்கள் இப்போது தான் 'இரும்புக் காலத்தில்' வாழ் கின்றனர்; அவர்களது நாகரீக வளர்ச்சி அவ்வளவுதான். அவர் களுக்கு இப்போது புதுமையான பொருள் இரும்புதான்.''

# கலெக்டர் அறிக்கை - தவருன அடிப்படையின் விளைவு

## உண்மை நிலையை அவர் உணரவில்லை

சேலம் நகரசபையில் வருத்தமும், தீர்மானமும்

சேலம், டிச. 27—

"சேலம் நகர சபையின் 1953-54-ம் ஆண்டு நிர் வாகத்தைப் பற்றி சேலம் கலெக்டர் அறிக்கை தயாரிப்பதில் போதிய கவனம் செலுத்தவில்லை என் பது வருந்தத்தக்கது,'' என்று நகர சபையின் நிர்வாகக் குறைகள் பற்றி சேலம் கலெக்டர் எழுதிய அறிக்கைக்கு வருத்தம் தெரிவித்து சேலம் நகர சபை தீர் மானம் ஒன்றை நிறைவேற்றியது.

"சாக்கடைத் திட்டம், குடி தண்ணீர், கல்வி, நகர அமைப்பு ஆகியவைகள் பற்றிய கலெக்டரின் கருத்து போதுமான தகவல் இல் லாத அடிப்படையில் தயாரிக்கப் பட்டதாகுமென்றும், மரலனேரி, சக்லி ஏரி பற்றிய கலெக்டரின் குறிப்புகள் தவருன கற்பனை, மேல்நோக்கான பரிசீலனை ஆகிய வற்றின் விளைவாகும் என்றும் அத்தீர்மானம் எடுத்துக்காட்டு கிறது.

கலெக்டர் யோசனை கூறு முன்பே, செகண்டரி பள்ளிகளை தனிப்பட்டவர்களுக்குக் கொடுத்து விட நகரசபை நடவடிக்கை எடுத்த தென்றும், சர்க்கார்தான் இதைத் தடுத்துவிட்டது என்றும், நகர சபையைக் குற்றம் சொல்லுவது நேர்மையல்லவென்றும் எடுத்துக் காட்டப்பட்டது.

1952—53-ம் ஆண்டு நிர்வாக அறிக்கையில், 'திருப்திகரமானது' என்று சொல்லப்பட்ட நகரசபைச் சாலைகள், திடீரென 1953—54ல், பயங்கரமாக மோசமாகிவிட்டது என்று சொல்வது, 'இயலாத நிலை,' என்று அத்தீர்மானம் மேலும் கூறுகிறது.

1951-ல், திருமணி முத்தாற்றை நகரசபை நிர்வகிக்கவும், சுகாதார நிலைமை சீர்திருத்தவும் முன் வந்த தென்றும், இத்துறையில் நகர சபை எடுத்துக்கொண்ட முயற்சி, 1953-ம் ஆண்டு டிசம்பர் 31-ல் கலெக்டர் உத்தரவினுல் பாழா யிற்று எனவும், கலெக்டர் நகர சபையின் கோரிக்கையை ஒப்புக் கொள்ளவில்லை என்றும் நகர சபையின் தீர்மானம் கூறுகிறது.

நகர சபையினர் இதுவரை ரூ. 5 லட்சம் செலவில் சாக்க டைத் திட்டம் ஒன்றை நிறை வேற்றி முடித்துள்ளனர் என்பது குறிப்பிடப்பட்டிருக்கிறது.

இதுவரையில், நகர சபை, 1,000 வீடுகளுக்குக் குடிதண்ணீர் குழாய்கள் அமைத்துக் கொடுத் திருக்கிறதாம்.

வரி பாக்கி பற்றி, கலெக்டர் கருத்தை நகர சபையின் தீர்மா னம் மறுத்திருக்கிறது.

"வரி நிலுவைகளில் மூன்றில் ஒரு பாகம் வசூலிக்கப்பட்டு விட் டது. கடந்த காலத்தில் நெசவுத் தொழிலாளர்களிடையே ஏற்பட்ட வறுமையை கலெக்டர் காணத் தவறிவிட்டார். இந்த நகரத்தின் செழிப்பு நெசவாளர்களின் நல னைப் பொறுத்திருக்கிறது என்ற உண்மையையும் அவர் கவனிக்கத் தவறிவிட்டார். ரூ. 100 பாக்கி யுள்ள இனங்களின் இத்தொகை, கடந்த மூன்றாண்டு காலமாகச்

(4-ம் பக்கம் பார்க்க.)





# "நம் உரிமைக் குரல் நாடெங்கும் முழங்கும்"

## "கழகக் கொள்கைகளை பரவாமல் தடுக்க ஆட்சியினர் செயலாற்ற முனைந்துவிட்டனர்"

பொதுச்செயலாளர் அண்ணாதுரை, பொன்னம்பலனர், மதியழகன், அன்பில்-தர்மலிங்கம், எம். எஸ். மணி சொற்பொழிவு

திருச்சி மாவட்டம் லெப்பைக் குடிக்காடு தி. மு. கழக முதலாவது ஆண்டு விழா 22—12—54 மாலை 6-30 மணிக்கு வானொலி மைதா னத்தில் தோழர் அ. பொன்னம் பலனர் தலைமையில் நடை பெற்றது. பல தோழர்கள் திரா விடப் பண் பாடினர். திருச்சி மாவட்ட தி. மு. கழகச் செயலா ளர் தோழர் அன்பில்-தர்மலிங்கம் கழகக் கொடியை ஏற்றி வைத்து சொற்பொழிவாற்றினர்.

தலைவர் முன்னுரைக்குப் பிறகு தோழர்கள் திருச்சி எம். எஸ். மணி, கே. ஏ. மதியழகன், பொதுச் செயலாளர் அண்ணாதுரை ஆகிய வர்கள் தி. மு. கழகக் கொள்கை களை விளக்கிப் பேசினர். காங் கிரஸ் ஆட்சியில் முஸ்லிம்கள் நிலைமை குறித்தும் பேசினர்.

நம் உரிமைக் குரல் எங்கும் முழங்கப்பட வேண்டுமென்றும், வருங்காலத்தில் நாடகத் தடை மசோதா போன்ற சட்டங்கள் இன்றைய ஆட்சியாளர்களால் நிறைவேற்றப்படலாமென்றும், நம் கொள்கைகள் பரவக்கூடாது என்ற தீய நோக்கத்துடன், ஆட்சி யிலிருப்போர் செயலாற்றி வரு கிருர்கள் என்றும் குறிப்பிட்டனர்

சமூகத்தில் பிற்போக்கு நிலை யிலும், கொடுமைக்குட்படுத்தப் பட்டுமுள்ள மக்கள் விடுதலைக்கு தி. மு. கழகம் நற்பணியாற்றி வருகிறது; ஆகவே, தி. மு. கழகத் திற்கு மேலும் இளைஞர்கள், உழைப்பாளிகள், விவசாயிகள், வியாபாரிகள், தொழிலாளர்கள் ஆதரவுதர வேண்டுமென்று கேட் டுக் கொண்டனர்.

தலைவர் முடிவுரைக்குப் பிறகு நன்றி கூறப்பட்டு கூட்டம் முடி வுற்றது.

தோழர் அமராவதி அவர்கள் யாவரையும் வரவேற்றுப் பேசி னர். பல கிளைக் கழகங்கள், உள்ளூர் கழகம், பொது மக்கள் சார்பில் பொதுச் செயலாளர் அவர்கட்கு மலர் மாலைகள் சூட்டி, கைத்தறி நெசவுத் துண்டுகள் அணிவித்தனர்.

### ஆரப்பாளையத்தில் பொதுக்கூட்டம்

12—12—54ல், இங்கு, தோழர் துரைராஜ் தலைமையில், லால்குடி நடராசன் படிப்பகச் சார்பில் தோழர் பொ. துரைராசு நடைபெற்ற பொதுக்கூட்டத்தில், தி. மு. கழகக் கொடியேற்றி வைத்து, கொடியின் தன்மை பற் றிப் பேசியபின் தோழர் ராஜ செல்லம் அவர்கள் கழகக் கொள்கை பற்றிப் பேசினர். பின் னர் பொதுச்செயலாளர் அவர்கள் மைத்துனரின் மறைவுக்கு அனு தாபம் தெரிவித்து தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

### பொள்ளாச்சி கே. எஸ். பாண்டியன் படிப்பகம்

11—12—54 இரவு 10 மணிக்கு தோழர் இரா. பாண்டியன் தலை மையில், மேற்படி படிப்பகம் நிறு வப்பட்டு, நிர்வாகிகள் தேர்ந்தெடுக் கப்பட்டனர்:—செயலாளர்: பி. கே. சேரமணி; துணைச் செயலா ளர்: இரா. பாண்டியன்; பொருளா ளர்: ஜி. எஸ். மணி; செயற்குழு உறுப்பினர்கள்: என். சேரமான், வி. அர்ச்சுனன், ஆர். லட்சுமணன், வி. கே. சாமி, எஸ். சண்முகம், கே. பி. சாமி, ஆர். சீரங்கன், கே. தங்கவேல், எம். கிருஷ்ணசாமி, கே. கேசவன், எஸ்.ரத்தினம், ஆர். மும்மூர்த்தி.

பல முடிவுகள் செய்யப்பட்ட பின், தோழர் ராஜாராம் சொற் பொழிவாற்றினர்.

★

# ரூ. 400 கோடி வரியாகத் தருகிறேம்; வாழ்வில் மறுமலர்ச்சி காணேம்!

## சுதந்திர குடியரசில் தென்னுட்டவர் நலிந்துவிட்டனர்

## திராவிடத்தின் 'செல்வங்கள்' வடநாட்டவர் சந்தைக்கடைக்கு கொள்ளை போவானேன்?

பட்டிவீரன்பட்டி, டிச. 25—

மதுரை மாவட்டம் சின்னுளப் பட்டி தி. மு. கழகத்திற்குப் புதி தாகக் கட்டப்பட்டிருந்த புதுக் கட்டிடத்தை சின்னுளப்பட்டியில் 24—12—54 மாலை 6-30 மணிக்கு பொதுச் செயலாளர் அண்ணு துரை அவர்கள் திறந்துவைத் தார்.

இதையொட்டி ஒரு பொதுக் கூட்டம் மாலை 7 மணிக்கு தோழர் வி. எஸ். எஸ். மணி அவர்கள் தலைமையில் நடைபெற் றது. கூட்டத்திற்கு உள்ளூர்— வெளியூர் கிளைக் கழகத் தோழர் கள், பொது மக்கள் ஆண்களும் - பெண்களுமாக பல்லாயிரக்கணக் கில் குழுமியிருந்தனர்.

தலைவர் முன்னுரைக்குப் பிறகு தோழர்கள் அ. பொன்னம்பலனர், கே. ஏ. மதியழகன், பொதுச் செயலாளர் அண்ணுதுரை ஆகிய வர்கள் திராவிட முன்னேற்றக் கழகத்தின் சமூக—அரசியல்— பொருளாதார விடுதலைக் கொள் கைகள் பற்றிப் பேசிய பின், சுதந்திரக் குடியரசு ஆட்சியில் தென்னுட்டவர் நலிவடைவதை சுட்டிக் காட்டினர். வளமார் திராவிடத்திலுள்ள வளமான செல்வங்கள் நம் மக்களுக்குப் பயன்படாமல், வடநாட்டார் சுரண்டலுக்கும், கொள்ளை இலா பத்திற்கும் மட்டுமே வியாபாரச் சந்தைக் காடாக மதிக்கப்படுவதை எடுத்துக் காட்டினர்.

தென்னுட்டவர் முன்னேற்றம் கருதி பயனுள்ள திட்டங்கள் தீட்டப்படவில்லை என்றனர்.

மேலும் அவர்கள் சொன்னுர் கள் :—

"சுதந்திரக் குடியரசு ஆட்சியில் நெசவுத் தொழிலாளர்கள் தங்கள் வாழ்க்கையில் வறுமை, பட்டினி, வேலையில்லாத் திண்டாட்டம், தற் கொலை ஆகியவைகளையே பரிசு களாகப் பெற்றுர்கள்; இந்தத் துயர்தீர திட்டங்கள் தீட்டப்பட வில்லை; அடக்குமுறைச் சட்டங் களும், துப்பாக்கி வேட்டைகளும், தடியடிப் பிரயோகமும், கண்ணீர்ப் புகை வீச்சும்தான் இவ்வாட்சியில் உரம் பெறுகிறது; முன்னேற்றக் கருத்துக்கள் கொண்ட நாடகங் கட்கும், ஏடுகட்கும், படக்காட்சி கட்கும் தடைகள் விதிக்கப்படு கிறது; மக்கள் உரிமைக்காக— விடுதலைக்காக கிளர்ச்சிகளும், அறப்போர்களும் நடத்திய விடு தலை வீரர்களை சிறைப்படுத்தி, வழக்குகள் சுமத்தி, ஆட்சியாளர் கள் அடக்கிவிட முயலுகிருர்கள்.

"நம் நாட்டு மக்கள் இங்கே வாழ வகையற்று, பிறநாடுகளில் பிழைக்கச் சென்று வதைபடு கின்றனர்; திராவிடத்தில் எல்லா வளங்களுமிருந்தும் அவைகள் நமக்குப் பயன்படாமல் போய் விட்டன, 400 கோடி ரூபாயை மத்திய ஆட்சிக்கு கொடுக்கிறேம்; ஆனல், 2000 கோடி ரூபாயில் தீட்டப்பட்ட ஐந்தாண்டுத் திட்டம் பெரும்பாலும் வடநாட்டை வள மாக்கி வடவரை வாழவைக்கவும், தென்னுட்டவரை என்றும் அடிமை நிலைமையில் வைத்திருக்க வுமே வடவர் ஆதிக்கம் செய்து விட்டது.

"மதம்—கடவுள்—புராணம் ஆகியவைகளை பகுத்தறிவுக் கண் கொண்டு பின்பற்றும்படி நாம் மக்கட்கு கூறுவதோடன்றி சிந்திக் கும்படியும் தூண்டுகிறேம். ஆனல், வடநாட்டவரும், அவர்தம் அடிவருடிகளும், ஆரிய மதக் கொள்கைகளை கண்மூடித்தனமாக மக்களிடையே பிரசாரம் செய்கி ருர்கள்; நாட்டில் மூடநம்பிக்கை களை வளர்ப்பதற்கு புரோகிதர்கள், குருமார்கள், ஆரியர்கள் முதலா னேருடன் கூடிக்கொண்டு, இந்து மத ஆதிக்கம் பரவச் செய்ய நோக் குடன் ஆட்சியாளர்கள் சட்டம் தீட்டுகின்றுர்கள்; கும்பமேளா வும், யாகங்களும் செய்து பார்ப்ப னீயத்தைக் காப்பாற்றப் பாடுபடு கிருர்கள்.

பக்த இராமாயணம், பக்த மீரா, பக்த துளசிதாஸ் போன்ற நாட கங்கள், பல்லாண்டுகளாக நம் நாட் டில் நடைபெற்று வந்தது; அவை கட்கு மாருக, புதுமைக் கருத்துக் களை—முன்னேற்றக் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்ட நாட கங்கள் நடைபெற்ருல், அவை கட்கு எதிராகத் தடை சட்டங்கள், சிறைவாசம் அடக்குமுறைகள், பிரயோகிக்கப்படுகின்றன; இது, இன்றையஆட்சியாளர்களின் போக் காக இருந்து வருகிறது. தென் னுட்டிலுள்ள ஏழை விவசாயிகள், நெசவுத் தொழிலாளர்கள், உழைப் பாளிகள், சமூகத்தில் பிற்போக் கடைந்துள்ளவர்கள் ஆகிய எட்டு கோடி திராவிட மக்களின் வாழ்க் கையில் முன்னேற்றமும், நாமும் வாழ்வில் விடுதலையும் பெற - ஒரே வழி, 'திராவிட நாடு திராவிட ருக்கு' ஏற்பட்டால் ஒழிய வேறு மார்க்கமில்லை.

பாகிஸ்தான் கேட்டபொழுது கேலியும், கிண்டலும் பேசியவர்கள் இறுதியில் பாகிஸ்தான் ஏற்பட ஒப்புக்கொண்டார்கள். அதுபோல், பண்டித நேருவின் காலத்திலேயே நட்புரிமையுடன் 'திராவிட நாடு' தனியரசு பெற, வட நாட்டார்— டில்லி சர்க்கார் நேசத்துடன் இணங்கிவிடுவதுதான் அறிவுடைமை யாகும்—அரசியல்விவேகமுமாகும்.

(4-ம் பக்கம் பார்க்க)

# நாடகத் தடை சட்டத்தை ஒழிக்க நல்லதொரு முடிவு காண்போம்!

## பழமைக் கருத்துள்ள நாடகங்களை மக்கள் வெறுத்துவிட வேண்டும்

அடக்குமுறைகளை அள்ளி வீசினுல் அடிகளாரும் ஆஸ்திகர்களும் எதிர்பார்க்கும் பலன் கிட்டாது

திருச்சி மாவட்டம் லால்குடி தி. மு. கழக முதலாவது ஆண்டு விழா 23—12—54 மாலை 6 மணிக்கு சிவன்கோவில் முன் அமைக்கப்பட்டிருந்த மேடையில் தோழர் அன்பில் தருமலிங்கம் தலைமையில் நடைபெற்றது.

தலைவர் முன்னுரைக்குப் பிறகு தோழர் எம். தங்கராஜ் ஆண்டு அறிக்கை வாசித்தார். பிறகு தோழர்கள் எம். எஸ். மணி, அ. பொன்னம்பலனர், கே. ஏ. மதி யழகன், பொதுச் செயலாளர் அண்ணுதுரை, ஆகியவர்கள் சமூக அரசியல், பொருளாதார விடுதலை குறித்துப் பேசினர்.

நாடகத் தடை மசோதாவை, அரசியலார் சட்டம் செய்திருப்ப தின் நோக்கம், புராண இதிகாச மூடக் கொள்கைகள் அழியாம லிருக்கவும், மறுமலர்ச்சி—சீர்திருத் தக் கருத்துக்கள் நாட்டில் பரவா மல் தடை செய்யவும், பகுத்தறி வுக் கொள்கைகளை நசுக்கவுமே யாகுமென்றும் எடுத்துக் காட்டி னர்.

இச்சட்டத்தை ஒழிக்க எல்லா அரசியல் கட்சித் தோழர்களும் கூடிக் கலந்து பேசி, நல்லதொரு முடிவு காணவேண்டுமென்று கேட்டுக் கொண்டனர்.

பழமைக் கருத்துள்ள நாடகங் களை யார் நடித்தபோதிலும், நாட்டு மக்கள், அந்நாடகங்களை வெறுத்து விட வேண்டுமென கேட்டுக் கொண்டனர்.

புதுமைக் கருத்துக்கள், பகுத் தறிவுக் கொள்கைகள் நிறைந்த நாடகங்கள் நாட்டில் ஏராளமாக நடந்தது — நடைபெற்று வருகி றது; இவைகளுக்கெல்லாம் தடை யில்லாதபோது இராதாவின் நாட கத்திற்கு மட்டும் தடைவிதிக்கப் படுவதேன்?—என்று கேட்டனர்.

சிறையில் அடைப்பதினுலும், அடக்குமுறைகளை அள்ளி வீசுவதி னுலும் எதிர்பார்க்கும் பலன் கிடைக்கப் போவதில்லை என்பதை வைதீகத்தில் நம்பிக்கை வைத்தி ருக்கும் ஆஸ்தீகர்களும், குன்றக் குடி அடிகளாரும் உணர்தல் வேண்டும் என்று குறிப்பிட்டனர்.

வடநாட்டு ஆதிக்கம் ஒழிந்து, வளமார் திராவிடம் எல்லா நலன் களும் பெற்று, ஏழை—அடிமை இல்லாமல், வறுமை—பட்டினி— பஞ்சம் தலைகாட்டாமல், அறிவு வளர்ச்சிக்குத் தடையில்லாமல் இருக்கவுமே திராவிட மக்கள் தனி ஆட்சி பெறவேண்டுமென தி. மு. கழகம் அரும்பணியாற்றி வருகிறது என்று விளக்கினர்.

பொதுச்செயலாளர் அண்ணு துரை அவர்கட்கு, உள்ளூர்— வெளியூர் கிளைக் கழகங்கள், பல் வேறு சங்கங்கள் சார்பில், மலர் மாலைகள் அணிவிக்கப்பட்டன. தலைவர் முடிவுரைக்குப் பிறகு, நன்றி கூறலோடும் இரவு 10-30 - மணிக்கு ஆண்டு விழா நிகழ்ச்சி முடிவுற்றது

# 'தொழில் நுணுக்க கல்வியில்தான் நாட்டு முன்னேற்றம்'

## பம்பாய் தலைமை நீதிபதி கருத்து

"இன்று பல மாணவர்கள் பல்கலைக் கழகப் பட்டப் படிப் பிற்கு ஆசைப்படுகின்றனர்; ஆனல், அவர்களுடைய படிப்பு முடிந்ததும் அவர்களை அமர்த்திக்கொள்ள போதுமான வேலை கள் இல்லை. இந் நாட்டில் படித்தவரிடையே வேலையில்லாத் திண்டாட்டத்தை உண்டுபண்ணியுள்ளது.''

"தொழில் நுணுக்க அறிவு பெற்றிருப்போரைப் பொறுத் துத்தான் நாட்டின் எதிர்காலம் இருக்கிறது; தொழிற்கல்வி பெற்றிருப்போர் நாட்டின் நலனுக்கு தங்கள் அறிவைப் பயன் படுத்த இயலும்; இதற்காக நாட்டில் தொழில் நுணுக்கக் கல்விப் பயிற்சிக்கான நிறுவனங்கள் ஏராளமாகத் திறக்கப்பட வேண்டும்.''

—என்று, பம்பாய் உயர்நீதி மன்ற நீதிபதி ஜஸ்டிஸ் எம். சி. சக்லா அகில இந்திய சீக்கிய கல்வி மாநாட்டில் பேசுகையில் குறிப்பிட் டிருக்கிருர்.

"உழைப்பின் மதிப்பை மாண வர்கள் உணரச் செய்வதும் கல்வி தரப்படுவதின் நோக்கங்களில் ஒன் ருகும்.

"கோடிக் கணக்கான கிராம மக்கள் முன்னேறவும் அவர்க ளுக்கு வழி காட்டவும் படித்தவ ரின் சேவை, தேவைப்படுகிறது; ஆனல், இப்போதுள்ள கல்வி முறை, கிராம மக்களுக்கு வழி காட்டப் பயன்படவில்லை,'' என் றும் அவர் கூறினர்.

# 'தொழில் முயற்சியில் விஞ்ஞானிகள் வேலையற்றிருப்பது பெரும் வியப்பு'

## பிரிட்டிஷ் நிபுணரின் விளக்கம்

"பெரும் தொழில் மயமாகும் துவக்கத்தில் உள்ள இந்தியா போன்ற ஒரு நாட்டில், விஞ்ஞானிகள் பலர் வேலையின்றி இருப்பது எனக்கு ஆச்சரியமாயிருக் கிறது,''

—என்று உலக விஞ்ஞானத் தொழிலாளர் கழகத் தலைவரும் பிரிட் டிஷ் விஞ்ஞானியுமான பேராசிரியர் ஜே. டி. பெர்னல் குறிப்பிட் டிருக்கிருர்.

இந்திய விஞ்ஞானத் தொழிலா ளர் சங்கக் கூட்டமொன்றில் பேசு கையில் மேலும் அவர் குறிப்பிட்ட தாவது :—

"இந்தியாவின் இன்றைய முக் கியமான பிரச்சினை யெல்லாம், எவ்வளவு சீக்கிரமாக நாட்டைத் தொழில் மயமாக்க முடியுமோ அவ் வளவு சீக்கிரம் ஆக்குவதுதான்; சில குறிப்பிட்ட நிபந்தனைகளின் பேரில், இந்தியா, வெளிநாட்டு மூலதனத்தை எதிர்பார்க்கலாம்: ஆனல், வல்லரசுகளிடமிருந்து அதிகமான உதவியை எதிர்பார்க்க முடியாது; தன்னுடைய வளங் களைக் கொண்டே நாட்டை முன் னேற்ற முயற்சிக்கவேண்டும்; அப் படிச் செய்வதில் காலதாமதம் இருக்கலாம்; ஆனல், நிச்சயம் அத்தகைய முன்னேற்றம் சாத்திய மானதேயாகும்.''

இந்தியாவில் தற்போது மொத் தம் 2,814 பொது உபயோக டெலி போன்கள் உள்ளன.

# இந்தியாவின் இன்றைய நிலைமை

★

இந்து மகாசபையினர் காண்பது :

## இந்துமதக் கொடுமையின் எதிரொலியே மதமாற்றம்!

## உண்மையை மறைக்க பாதிரிகள் மீது இந்து தலைவர் பாய்ச்சல்

சென்னை, டிச. 28—

"இந்தியாவில், குறிப்பாக தென்னாட்டில், இந்துக்களை கிறிஸ்து வர்களாக்கும் மத மாற்றம் வெளி நாட்டு மிஷினரிகளால் பெரும் அளவில் நடத்தப்பட்டு வருகிறது ;

"இந்துமத நம்பிக்கையிலிருந்து வேறு மத நம்பிக்கைக்கு மக்களை மாற்றுவது, இந்தியா சுதந்திரம் பெற்ற பிறகுதான், அலாவுதீன் கில்ஜி காலத்தில் இருந்ததைக் காட்டிலும்கூட அதிகமான அளவு நடைபெறுகிறது ;

"ஆயிரக்கணக்கானோர் வெளிநாட்டு மிஷினரிகளால் கிறிஸ்துவர்களாக ஆக்கப்பட்டு வருவதை முறியடிக்க நாடு முழுவதும் துவங்கப்பட்டுள்ள 'சுத்தி' இயக்கத்தில் எல்லோரும் சேரவேண்டும் ;

"இந்த மத மாற்றத்தைத் தடுக்காவிட்டால், மதமாற்றம் பெறும் கிறிஸ்துவர்கள் இந்தியாவிற்கு எதிராக, யுத்த காலங்களில் பலம் பொருந்திய ஐந்தாம் படையினராக மாறி இந்தியாவை, கலாச்சார அரசியல் ரீதியாக கேடுகளுக்கு ஆளாக்குவர் ;

"நான் இதைக் கூறுவதினாலேயே கிறிஸ்துவ மதத்தையும், கிறிஸ்துவர்களையும் எதிர்ப்பதாக அல்ல பொருள்,"

*—என்று, அகில இந்திய இந்து மகா சபைத் தலைவர் என். சி. சட்டர்ஜி பத்திரிகை நிருபர்களிடை கூறினார்.*

*திரு—கொச்சியில், காலடி எனுமிடத்தில் 'சங்கர வேதாந்தக் கல்லூரி' ஒன்றை நிறுவ இராம கிருஷ்ண மட சுவாமி ஒருவர், கிறிஸ்துவ மிஷினரிகளின் பெரும் எதிர்ப்பைச் சமாளிக்க வேண்டியிருந்ததென்ற சம்பவத்தையும் திரு. சட்டர்ஜி குறிப்பிட்டுக் காட்டினார்.*

*அந்தப் புனிதமான இடத்தில் இப்போது ஒரு இந்துக் குடும்பம் கூட இல்லையென்றும், எல்லோரும் கிறிஸ்துவர்களாக ஆக்கப்பட்டு விட்டார்களென்றும் தனக்குச் சொல்லப்பட்டதாயும் திரு. சட்டர்ஜி கூறியிருக்கிறார்.*

★

## நெருப்பை நெருப்பால் அணைக்க கூறும் பேதமை!

## இந்து மதத் தீய விளைவுகளுக்கு அம்மதத்திலேயே மருந்து தேடும் மடமை!

சென்னை, டிச. 28—

"தென்னிந்தியாவில் வளர்ந்துவரும் மத எதிர்ப்பு, வடநாட்டு எதிர்ப்பு இயக்கத்தை முறியடிக்க ஒரு வழியுண்டு ; இந்து மதக் கலாச்சாரத்தை அதிகமாக வலியுறுத்துவதும், இந்தியா முழுவதும் 'இந்து' என்ற உள்ள உணர்வை ஊட்டுவதும்தான் அந்த வழியாகும் ;

"தென்னிந்தியர்களின் சந்தேகங்களைப் போக்குகிற வகையில், இந்தி மொழிப் பிரசாரம் நடைமுறைக்கொப்ப நடைபெற வேண்டும் ;

"அகில இந்திய சர்க்கார் உத்தியோகங்களுக்கு வட இந்தியர்கள் தென்னிந்திய மொழிகள் ஒன்றைக் கட்டாயமாகப் படிக்க வேண்டும் என்றும், தென்னிந்தியர்கள் வட இந்திய மொழிகளுள் ஒன்றைக் கட்டாயமாகப் படிக்க வேண்டும் என்றும் நிர்ணயம் செய்வதே இந்து மகா சபையின் திட்டமாகும்.

"இந்துக் கலாச்சாரம் என்பதே, ஆரிய - திராவிடக் கலாச்சாரங்களின் கூட்டுச் சேர்க்கை என்பதையும் நாம் மறந்துவிடக் கூடாது,"

*—என்று, அகில இந்திய இந்து மகா சபைத் தலைவரான என். சி. சட்டர்ஜி நிருபர்களிடை பேசுகையில் கருத்தறிவித்திருக்கிறார்.*

மகா சபையின் பொதுச் செயலாளரான தேஷ் பாண்டேயும், தலைவர் சட்டர்ஜியும், 'தென்னிந்தியா மீது வட இந்தியா ஆதிக்கம் செலுத்துகிறது,' என்பதை முழுவதும் மறுத்தனர்.

*அவர்கள் கூறினார்கள் :—*

*"மாறாக, தென்னிந்தியா, வட இந்தியா மீது ஆதிக்கம் செலுத்துவதாக, வட இந்தியாவில் எண்ணம் நிலவுகிறது ; ஏனெனில், இப்போதுள்ள இந்துமதம், பெரும் அளவு, தென்னிந்தியாவில் தோன்றிய ஆச்சாரியார்களாலேயே;குறிப்பாக சங்கராச்சாரியார் போன்றவர்களாலேயே உருவாக்கப்பட்டதாகும்.*

மேலும், சர்க்கார் இலாகாக்களிலும் அரசியல் பதவிகளிலும் தென்னிந்தியர்கள் பெருவாரியாக இருக்கின்றனர்; இந்தியாவின் தலைநகரம் வடக்கிலிருப்பதால், தென்னிந்தியர்களுக்கு நியாயமான சில குறைபாடுகள் இருக்கலாம் ; வட இந்தியத் தலைவர்களிடையே சற்று பூகரும், எண்ணிப்பார்க்கும் திறனும் இருக்குமானால் அந்தக் குறைகள் தவிர்க்கப்படலாம்."

*என்று குறிப்பிட்டிருக்கின்றனர்*

### ரூ. 400 கோடி....

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

*"அடக்குமுறையால் விடுதலைக் கிளர்ச்சிகளை நசுக்கிவிடமுடியாதென்பதை இன்றைய ஆட்சியாளர்கள் உணர்தல் வேண்டும்.*

*"தென்னாட்டு மக்களும், காங்கிரசிலுள்ள இளைஞர்களும் நன்றாகச் சிந்தித்து, நாட்டுரிமைக் கிளர்ச்சியில்—விடுதலை உரிமைக் கிளர்ச்சிகளில் பங்குகொண்டு, திராவிட நாட்டைப் பெற, திரா*

### கழகக் கூட்டங்கள்

★

சமயநல்லூர்

திருவள்ளுவர் திடலில்

30-12-54 மாலை 6-30 மணிக்கு

*தலைவர் :* எஸ். இராமச்சந்திரன்

பேசுவோர் :

எம். எஸ். இராமசாமி

வே. சவுந்திரராசன்

கே. எஸ். சந்தானம்

**வ.உ.சி. மன்றத் திறப்பு விழா**

30—12—54 *மாலை 5 மணிக்கு, சென்னை, ஓட்டேரி, பாஷியம் ரெட்டி முதல் தெருவில், வ. உ. சி. மன்றத் திறப்பு விழா, தோழர் எஸ்.பக்கிரிசாமி பிள்ளை,எம்.எல்.ஏ. தலைமையில் நடைபெறும். தோழர்கள்* இரா. நெடுஞ்செழியன், முகவை ஆர்.எஸ்.பாண்டியன், டி. வி. நாராயணசாமி ஆகியோர் பேசுவர்.

**சேலம் நகர தி. மு. கழக உறுப்பினர்கட்கு**

30—12—54 இரவு 9 மணிக்கு, *சேலம் நகர தி. மு. கழக உறுப்பினர் கூட்டம், 13-வது வட்டம் (கல்லாங்குத்து) கிளையில் நடைபெறும். அதுபோது பல விஷயங்கள் பற்றி யோசிக்கப்படும்.*

### இராமாயண....

(1-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

திருமணம் நடப்பதைக் காட்டுகின்றன. தம்பதிகளுக்குப் புரியாத மொழியில், 'வேதம்' என்று சொல்லி, புரோகிதர்களை வைத்துத் திருமணம் செய்யும் முறையை சினிமாக்கள் மூலம் பரப்ப ஆரம்பித்து வருகிறார்கள் ; 'சாமி, சிக்கிரம் நடத்துங்கள்,' என்று சொல்லிக் காட்டுகிறார்கள். சர்க்கார் போகும் போக்கிலேயே நிலைமையை அனுசரித்து, சினிமாப் படங்கள் வர ஆரம்பித்துவிட்டன.

*'சீர்திருத்தங்கள் ஏற்பட வேண்டும்' என்று மக்கள் விரும்பும் இந்தக் காலத்தில், சீர்திருத்தக் கருத்துக்களை மக்களுக்குப் புகட்ட வேண்டிய ஒரு காரியத்தை, கலையில் சம்பந்தப்பட்டவர்கள் செய்ய வேண்டியிருக்க, 'கலையில் ஆர்வம் உள்ளவர்கள்' என்று சொல்லிக் கொள்பவர்களே, சீர்திருத்தக் கருத்துக்களைக் கெடுத்துவிடக்கூடாது என்று எடுத்துக் காட்ட விரும்புகிறேன்.*

மகாபாரதத்தில், கீதையை உபதேசித்த கிருஷ்ணன் என்பவனைக் கடவுளாகப் பாவிக்கிறார்கள் ; ஆனால், திருக்குறளை இயற்றிய திருவள்ளுவர், 'பகவன்' என்ற பிராம்மணனுக்

*விட நாட்டுச் செல்வங்களைப் பிறர் சுரண்டாமல் தடுக்க, திராவிட நாட்டு மக்களும் வாழ்வில் நலமும், கல்வி அறிவு, கைத்தொழில், விஞ்ஞானம் ஆகிய துறைகளில் பிற நாடுகளைப்போல முன்னேற்றமும் காணச்செய்ய முன்வரவேண்டும்."*

*பொதுச்செயலாளர் அவர்கட்கு பல ஊர் தோழர்களும், கிளைக் கழகங்களும் மலர்மாலைகள் அணிவித்து, வரவேற்பு மடல்களும், கைத்தறித் துண்டுகளும் அணிவித்ததுடன், கல்லக்குடி, தூத்துக்குடியில் உயிர்நீத்த தோழர்கள் குடும்ப நிதிக்காக சிறு சிறு நிதி முடிப்புகளும் அளித்தனர்.*

*சின்னாளப்பட்டி தி. மு. கழகக் கட்டிடத்திற்காக இடம் (நிலம்) கொடுத்த தோழர் சுப்பையா அவர்கட்கு பொதுச்செயலாளர் நன்றி கூறி மலர் மாலை சூட்டினார்.*

★

கிருத்துவர் காண்பது:

## "பொது வாழ்வு பாழ்; ஒழுக்கம் ஒழிந்தது!"

## "இந்தியக் கலாச்சாரத்தை இந்து கலாச்சாரமாக்கச் சதி"

## டாக்டர் ஆசீர்வாதம் எச்சரிக்கை

முஜாபர்பூர், டிச. 27—

"சுயநல, அரசியல் நோக்கங்களுக்காக, பசு ஒரு புனித மிருகம் என்று சாக்கு கூறி, அதற்குப் பாதுகாப்புத் தேவை என்று தீவிரமானதொரு இயக்கமே நடத்தப்படுகிறது ; மிருகங்களைக் கொல்லக் கூடாது—அதிலும், குறிப்பாக, பசுக்களைக் கொல்லவே கூடாது என்று கூறுவது, ஜீவகாருண்யம் என்ற அடிப்படையில் சரியானது எனக் கொள்ளப்படுகிறது ; ஆனால், பசுவின் புனிதத்தன்மையை நாடு முழுதும் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பது, சிலருக்குப் புனிதமல்லாத ஒன்றாயிருப்பதை, 'ஒருவகையான புனிதத் தன்மை,' என ஏற்றுக்கொள்ளுமாறு நிர்ப்பந்திப்பதாகும்."

*இவ்வாறு நாகபுரி பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த டாக்டர் ஆசீர்வாதம் இந்திய அரசியல் சாஸ்திர 17-வது மாநாட்டில் தலைமையுரை ஆற்றுகையில் குறிப்பிட்டிருக்கிறார்.*

### அறிவிக்கவும்

கடந்த **3-12-54**ல், குன்றை நகர தி. மு. கழகச் செயலாளர் வீ. கா. ஒளியழகன் கோவை செல்வதாக சொல்லிச் சென்றார். இன்றுவரை குன்றை திரும்பவில்லை ; அவரிடமிருந்து தகவலும் இல்லை. சேலத்தில் இறந்துவிட்டதாக குன்றையில் வதந்தி உலாவுகிறது. இச்செய்தியால் கழகத் தோழர்களும், அவர் குடும்பத்தாரும் துயரத்தால் வருந்துகிறார்கள். இதுவிஷயம் (வீ. கா. ஒளியழகன்)தெரிந்தவர்கள் கீழ்க்கண்ட முகவரிக்கு உடனடியாகத் தெரிவிக்கும்படி தாழ்மையோடு கேட்டுக்கொள்கிறேன்.

*முகவரி :—டி. பி. எஸ். மணி, துணைச்செயலாளர், நகர தி.மு.க. குன்றை, நீலகிரி மாவட்டம்.*

கும்—'ஆதி' என்ற புலைச்சிக்கும் பிறந்தவர் என்று சொல்லி, சினிமாவில் காட்டுவது, எவ்வளவுதூரம் மக்களுடைய மனதைப் புண்படுத்தும் என்பதை யோசித்துப் பார்க்க வேண்டும்.

கிருஷ்ணனைக் கடவுள் என்று காட்டும்போது, திருவள்ளுவரை மேற்சொன்ன முறையில் சினிமாவில் காட்டுவதும் மக்களுடைய மனதைப் புண்படுத்தக்கூடிய அளவுக்கு இருப்பதால், 'மனம் புண்படுதல்' என்ற காரணத்திற்காக அப்படிப்பட்ட சினிமாப் படங்களைத் தடுக்க முன்வருவார்களா என்று கேட்கின்றேன். 'புண்படுத்தக்கூடிய' நிலைமை என்று வரும்போது, சர்க்கார் எடுக்கும் நடவடிக்கைகள், மூட நம்பிக்கையை ஒழித்து சீர்திருத்தக் கருத்துக்களைப் புகுத்தக்கூடிய நாடகங்களைத் தடை செய்யக்கூடிய முறையில் இருக்கக்கூடாது.

*பண்டைக் காலத்திலிருந்து ஒரே நிலையில் நிலவிவரும் போக்கை, சீர்திருத்தக் கருத்துக்களைக் கொண்டு மாற்றுவதற்கு முயலுகையில், அதற்குத் தடையான காரியங்களை சர்க்கார் செய்ய வேண்டாம் ; ஆகவே, இந்தச் சட்டத்தின்படி நடவடிக்கை எடுக்கு முன் சர்க்கார் ஒரு தக்கார் கொண்ட குழுவைக் கலந்து ஆலோசனை செய்ய வேண்டுமெனக் கோருகிறேன்."*

*அவர் மேலும் பேசுகையில், இந்தியக் கலாச்சாரம், இந்தியப் பாரம்பரியம் என்ற பெயரில், ஒரு மதச் சார்பற்ற நாட்டின் இலட்சணத்திற்குப்புறம்பான காரியங்கள் சிலவும் செய்யப்படுவதாகக் குறை கூறினார்.*

*தொடர்ந்து பேசுகையில் அவர் குறிப்பிட்டதாவது :—*

"அறிவு, தைரியம்,பொறுமை, நீதி இவையெல்லாம், மதிப்பிழந்து அழிந்து விட்டவையல்ல ; அவை என்றென்றும் நிலைத்து நிற்கக்கூடியவையாகும்.

"நாட்டில் இன்றுள்ள பொது வாழ்க்கை, லஞ்சம், ஊழல், பதவிச் சுயநலம், பொதுப் பொறுப்புணர்வில்லாமை இவற்றால் பாழடைந்துள்ளது.

"பொது ஒழுக்கம் குன்றியுள்ள இக்காலத்தில், காந்தியார் மக்களின் ஒழுக்கத்தை உறுதி செய்ய என்ன செய்தாரோ அதை மீண்டும் செய்யலாம்.

"இந்திய கலாச்சாரம் உருவாவதற்கு இந்து, பௌத்த, ஜைன, சீக்கிய, கிறித்துவ, முகம்மதிய மதங்களும், மேலை நாட்டு நாகரீக ஊடுருவலும் பெரும் அளவுபயன்பட்டிருக்கின்றன. இதை மறந்து இந்தியக் கலாச்சாரத்தை இந்து மதக் கலாச்சாரமாக்க வஞ்சம் நிறைந்த முயற்சிகள் நடைபெறுகின்றன."

### கலெக்டர் அறிக்கை......

(2-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

*சேர்ந்ததாகும். வரி நிலுவையான ரூ. 6 லட்சத்தில், நெசவாளர் அல்லாதாரிடமிருந்து வரவேண்டிய தொகை ரூ. 80,000 ஆகும் ; ஆகவே, பணக்காரர்களிடமிருந்து தான் ஏராளமான வரி பாக்கியுள்ளது என்று கூறுவது சரியல்ல ; இத்தொகைக்கும், நெசவாளரின் வறுமைக்கும் சம்பந்தமில்லை ; இது உண்மையின்பால் எடுக்கப்பட்ட முடிவு அல்ல," என்று நகர சபையின் தீர்மானம் மேலும் கூறுகிறது.*

*திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம். ஏ., அவர்களால், அழகிரி அச்சகத்தில் அச்சிடப் பெற்று (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர் :* **சி. என். அண்ணாதுரை, எம். ஏ.,**

